[Sri P. S. Chinnadurai] [19th August 1960

என்று ராஜ்ய சர்க்கார் தரப்பிலே கருதப்படுவதாக ஒரு வார்த்தை சொன்னால்கூட இந்தத் தீர்மானத்தை நான் வாபஸ் பெற்றுக்கொள்வதற்கும் தயாராயிருக்கிறேன். ஆனால், காரணமே இல்லாமல், ஒரு வகையான பிடிவாத உணர்ச்சியை ராஜ்ய சர்க்கார் காட்டினால் அப்பொழுதுதான் இந்தச் சபை இந்தத் தீர்மானத்தின் அவசியத்தை உணரவேண்டிய அவசியம் இருக்கிறது என்று நான் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

எந்தநேரத்தில் இம்மாதிரி பிரச்னை வந்தபோதிலுங்கூட, ராஜ்ய சர்க்கார் தரப்பிலேயிருந்து சரியான முகாந்திரம் காட்டப்படவில்லை. தமிழ்நாடு என்று பெயர் வைக்க எந்த அளவிலே அவர்கள் விரும்பவில்லை, ஏன் விரும்பவில்லை என்று சரியான காரணங்களை இதுகாறும் காட்டவில்லை. நிதி அமைச்சர் அவர்கள் வழக்கறிஞர் என்ற முறையில் மிகத் திறமையாக வாதாடக் கூடியவர் என்றாலும், தகுந்த காரணங்களை இதற்கு எதிராகக் காண்பிக்க முடியாது என்றுதான் நான் நினைக்கிறேன். ஏனென்றால் அவருடைய மனச்சாட்சி ஒருபொழுதும் இதற்கு எதிராகப் பேச இடம் அளிக்கவே முடியாது என்பதில் எனக்குத் திடமான நம்பிக்கை உண்டு. ஏனென்றால், இருவரும் ஒரே மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள் என்ற முறையிலே அவருடைய மனச்சாட்சியை என்னால் அறியக்கூடும், என்னுடைய மனச்சாட்சியையும் அவரால் அறிய முடியும், என்று எடுத்துக்கொண்டு தான் அவ்வளவு உரிமையோடு பேசுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஒரே மாவட்டமாக இல்லாவிட்டாலும் அறிய முடியும்.

**SRI P. S. CHINNADURAI :** அது தவிர, வேறு நோக்கம் ஒன்றுமில்லை. எப்படியும் ராஜ்ய சர்க்கார் இந்தத் தீர்மானத்திற்குத் தங்கள் முழு மனதோடு கூடிய ஆதரவை நல்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : The hon. Member may continue his speech on the next non-official day.

1-28 p.m. The House will now adjourn and meet again at 8-30 a.m. to-morrow.

The House then adjourned.

### IV. PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE

#### A. STATUTORY RULES AND ORDERS.

112. Notification issued with G.O. Ms. No. 1080, Local Administration, dated 25th June 1960, extending the term of office of the members of the Othakadai Panchayat (Madurai district) under section 10 (1) of the Madras Village Panchayats Act, 1950. [*Laid on the table of the House under section* 113 (4) *of the Madras Village Panchayat's Act*, 1950. (*Madras Act X of* 1950).]

#### B. REPORTS, NOTIFICATIONS AND OTHER PAPERS.

51. Assurance No. 928—Answer to Legislative Assembly starred Question No. 724, asked by Sri A. A. Rasheed and three others.